உ

# சைவ நற்சிந்தனை



ப. சிவானந்த சர்மா
(கோப்பாய் - சிவம்)
செயலாளர், திருநெறிக்கழகம்



வெளியீடு :
திருநெறிக் கழகம்
கிளிநொச்சி

1986

திருநெறிக் கழக வெளியீடு — 1
வெளியீடு — மாசி 1986





அச்சுப் பதிவு :
திருமகள் அழுத்தகம்,
சுன்னுகம்.

விலை : ரூபா 4/-

# அணிந்துரை

[கிளிநொச்சிப்பகுதி நீர்ப்பாசனப் பொறியியலாளர், சொல்லிசைச் செல்வர் திரு. த. சுப்பிரமணியம் அவர்கள் வழங்கியது]

நெஞ்சே நீ நினையாய் — நிமிர்
புன்சடை நின்மலனை
மஞ்சாடும் மலை மங்கை மணாளனை
நெஞ்சே நீ நினையாய். என்பது அப்பர் தேவாரம்.

"நினைவு நல்லது வேண்டும்......" என்பது பாரதியார் வாக்கு. எமது மொழியில் மட்டுமல்ல, உலகிலுள்ள மொழிகள் யாவற்றிலுமே மனம் — நினைவு — சிந்தனை சிறந்த இடத்தினைப் பெறுவதை நாம் அவதானிக்கலாம். ஆம், இந்த உலகம் முழுமைக்கும், அதன் இயக்கம் யாவைக்கும், அந்த இயக்கத்துக்கேற்ற வகையில் தன்னை இயைபுபடுத்திக்கொள்ள மனித இனம் கைக்கொண்டுள்ள வாழ்க்கை முறைக்கும் காலத்திற்குக் காலம் இம் முறையில் ஏற்படுத்தும் மாற்றங்கட்கும் சுருங்கக்கூறின், அனைத்துக்குமே வழி வகுப்பது சிந்தனையேயாகும். உலகத்துயிரினங்களில் மனிதகுலத்திற்கு மட்டுமே உரித்தான பொக்கிஷம் சிந்தனையாம். ஆக்கவும், காக்கவும், அழிக்கவும் சிந்தனையே காரணமாக அமைகிறது. ஆகவே உலகம் செவ்வனே வாழ, அதில் பயனுள்ளவர்களாக நாமும் இயங்க எமது சிந்தனை—நற்சிந்தனையாக இருப்பது மிக மிக அவசியமாகும். அதுவும் அகிலமதங்கள் யாவற்றிற்கும் மூத்த மதமாகிய சைவ மதத்தைச் சேர்ந்த மக்களது சிந்தனை முழு உலகிற்குமே எடுத்துக்காட்டாக விளங்கவேண்டியது மிகமுக்கியம். துரதிர்ஷ்டவசமாக, தற்காலத்துச் சைவசமயிகளில் பெரும்பான்மையோர் சைவசமய தத்துவங்களை அறியாதவர்களாக, சைவத்தின் பெருமையை உணராதவர்களாக இருக்கின்றனர். ஆகவே இவர்களுக்கும், கல்வி அறிவும் சமய அறிவும் குன்றிய மற்றையோர்க்கும் சைவ நற்சிந்தனையைப் புகட்டுவதென்பது ஒரு மாபெரும் மக்கள் சேவையாகும். ஆகவே இதுவே மகேசன் சேவையுமாகும்.

இந்தச் சேவையினைச் செவ்வனே செய்திருக்கிறார் அன்பர் கோப்பாய்—சிவம் அவர்கள். அவர்க்கு அறிமுகம் வேண்டுவதில்லை. பாரத நாட்டிலே ஒருவருக்குச் சேரும் சொத்தினை இரண்டு வகையாக வகுத்திருக்கின்றனர். பிதிரார்ஜிதம், சுயார்ஜிதம். பிதிரார்ஜிதம்—தந்தை வழியாக மகனுக்குக் கிடைப்பது. சுயார்ஜிதம்—தானே உழைத்துத் தேடிக்கொள்வது. அன்பர் கோப்பாய்—சிவம் இரண்டு சொத்துக்களையுமே பெறும் பாக்கியம் பெற்றவர். ஆம், அவரது தந்தையார் பிரம்மஸ்ரீ ச. பஞ்சாட்சர சர்மா அவர்கள் சிறந்த சைவ அறிஞர். நாடறிந்த

இலக்கிய வல்லுனர். சைவத்திற்கும் தமிழிற்கும் அவர் ஆற்றிய தொண்டு வார்த்தைகளில் அடங்கற்பாலதன்று. அவரது தொண்டின் சிகரம் என வர்ணிக்கப்படக்கூடிய தொண்டு ஒன்றுண்டெனில், அஃது தம் வழியில் தொண்டினைத் தொடர மணியான ஒரு வாரிசாக, கோப்பாய்—சிவத்தினை, சைவத்திற்கும் தமிழுக்கும் ஈந்தமையேயாகும். ஆக, சைவத்தமிழ் அறிவினையும் தாம்பெற்ற அறிவைப் பாமரனும் அறிந்து கொள்ளக்கூடிய வகையில் எடுத்தியம்பும் திறமையையும் ஒருங்கே, பிதிரார்ஜிதமாகவும், சுயார்ஜிதமாகவும் அமைந்துள்ள கோப்பாய்—சிவம் தமிழ் உலகிற்குக் கிடைத்த வரப்பிரசாதம் எனத் துணிந்து கூறுவேன்.

இந்நூலின் கண்ணே பல்வேறு நாட்களில் வானொலியில் ஒலிபரப்பான பத்து நற்சிந்தனைகள் அடங்கியுள்ளன. உதய காலத்தின் உயர்வை விளக்குவதோடு ஆரம்பமாகி, மிகவும் நன்மை பயப்பதாகிய நாமபஜனை, பிரபஞ்சதத்துவம், ஒலியின் சக்தி முதலிய பல அம்சங்களை விளக்கி இறுதியாக ''விளக்கமறியா வழக்கம்'' என்ற சிந்தனையோடு நூல் முடிவுறுகிறது. இந்நூலின் பத்துச் சிந்தனைகளும் விலைமதிப்பில்லா முத்துக்களேயெனினும், அடியேனை அதிகம் கவர்ந்தது இறுதியான ''விளக்கமறியா வழக்கம்'' என்ற முத்துத்தான். இக்காலச் சைவர்கட்கு மிகவும் அவசியமான அறிவூட்டலாய் இது அமைகிறது. வேத-ஆகம உண்மைகளை விளக்குகின்ற வழி நூல்கள் கூறுகின்ற புராணக்கதைகள் புகட்டும் தத்துவார்த்தங்களையோ உட்பொருள்களையோ அறிய முயலாது புராணங்கள் சொல்லும் கதைகளை அப்படியே நம்பத் தலைப்பட்டுள்ள நிலை தற்போது உருவாகியுள்ளது. ஸ்கந்தப்பெருமான் இருவரை மணம் செய்துள்ளார். கந்தபுராணம் காட்டும் உண்மையிது. எனவே இருதார மணம் சைவ சமயத்தில் அனுமதிக்கப்பட்ட ஒன்று என்று கூறும் சைவர்களை நான் சந்தித்திருக்கிறேன். விளக்கமறியா வழக்கத்தின் பயன் இது. ''கண்கள் தீயைக் கக்கின'' என்றால், உண்மையாகவே சுவாலைவிட்டெரிகின்ற நெருப்பு கண்களிலிருந்து புறப்பட்டது என்று அர்த்தம்கொள்வது போன்றதுதான் இந்நிலை. இந்நிலை மாறவேண்டியதன் அவசியத்தை சுவாரஸ்யமான பூனைக்கதை ஒன்றினை மேற்கோளாக்கி நன்கு விளக்கியுள்ளமை எவரும் சிலாகிக்க வேண்டிய அம்சமாகும்.

அன்பர் கோப்பாய்—சிவம் அவர்கள் வயதில் மிக இளைஞராய் இருந்தும்—தமது திறமையாலும் அயரா உழைப்பினாலும் வேகமாகப் பிரபலமாகி வருகின்றமை யாவரும் அறிந்ததே. அவர் நீண்ட ஆயுள் பெற்று மென்மேலும் சைவத்தொண்டும், தமிழ்த்தொண்டும் புரிய எல்லாம் வல்ல இறைவனின் அருளினை இறைஞ்சுகின்றேன்.

''மேன்மை கொள் சைவ நீதி விளங்குக உலக மெல்லாம்''

# முன்னுரை

எமது பழம்பெரும் சமயமான சைவசமயத்தினைக் கைக்கொள்ளும் பலர் பெயரளவில்மட்டும் சைவராக இருந்துகொண்டு நடைமுறையில் சைவசமய உண்மைகளை உணராத வெறும் 'சைபர்' களாக (பூச்சியம்) இருக்கின்றமை வருந்தத்தக்கது. இதற்கு யார் காரணம்?

சமய அநுஷ்டானங்களில் அக்கறையில்லாத பலர் குற்றவாளிகளாகக் கருதப்படுகிற அதேநேரத்தில் மெய்யாகவே ஆன்மீக உணர்வும், மதநம்பிக்கையும், சமய அனுட்டானங்களில் ஆழ்ந்த பற்றும் உடையவர்கள் பலர், அவற்றை முறையாக அறிந்துகொள்ளாததால் தவறிழைக்கின்றனர். இவர்களுக்குச் சரியான வழிகாட்டவேண்டிய சமயப் பெரியார்கள், மதபோதகர்கள் தமது கடமையைச் செவ்வனே நிறைவேற்றாதவரையில் அவர்களே பெரும் குற்றவாளிகளாகிறார்கள்.

அடிப்படைச் சமய உண்மைகள் பற்றிய போதிய விளக்கமின்மை பாமர மக்களைப் பிடித்திருக்கிறது. சமயச் சடங்குகளின் நோக்கங்கள் தத்துவ உட்பொருள்களை அவர்களுக்கு எடுத்துரைப்பதற்கு ஆளில்லாத குறை நம்மிடையே நிலவுகிறது.

இக்குறையை நீக்கும் முயற்சியில் கிளிநொச்சி திருநெறிக்கழகம் நீண்டகாலம் பணியாற்றிவருகிறது. சமய அறிவுப் போட்டிகள் மூலம் புதிய விஷயங்களைக் கற்பதில் ஆர்வத்தை மாணவர்களிடையே ஏற்படுத்துவதுடன் சமயச் சொற்பொழிவுகள், புராணபடனங்கள் போன்றவைமூலம் சாதாரண மக்களுக்குப் பலவகையிலும் சமய அறிவை ஊட்டிவருகிறது இக்கழகம்.

இந்தவகையில் நூல் வெளியீடு என்ற சிறந்த பணியிலும் ஈடுபடுகிறது. இலங்கை ஒலிபரப்புக் கூட்டுத்தாபனத்தில் என்னால் நிகழ்த்தப்பட்ட சைவநற்சிந்தனைகள் சிலவற்றை நூல்வடிவில் வெளியிட முன்வந்திருக்கிறது கழகம்.

பாமர ஜனங்களும், மாணவர்களும் புரிந்துகொள்ளக்கூடிய இலகு நடையில், சில முக்கியமான அடிப்படைச் சமய உண்மைகளையும் அநுட்டான முறைகளையும் இச் சிந்தனைகள்மூலம் சொல்ல முற்பட்டிருக்கிறேன். சைவ அன்பர்களிடமிருந்து இந்நூல்பற்றிய கருத்துக்களை ஆவலுடன் எதிர்பார்த்திருக்கிறேன். அறிவில் மிகச் சிறியவன் ஆகிய யான் செய்துள்ள இப்பணியில் தவறுகள் இருப்பின் மன்னிப்பதோடு சுட்டிக்காட்டித் திருத்துமாறும் வேண்டுகிறேன்.

இத்துறையில் என்னை ஆர்வமூட்டி ஈடுபடச்செய்து வானொலியில் எனது சைவநற்சிந்தனைகள் ஒலிபரப்ப வகைசெய்த வானொலி அறிவிப்பாளராயிருந்தவரும் யாழ்ப்பாணம் பல்கலைக்கழக விரிவுரையாளருமான திரு. கனகசபாபதி நாகேஸ்வரன் அவச்களுக்கு எனது நன்றிகள்.

இந்நூல் முயற்சிக்கு வேண்டிய ஆலோசனைகள் வழங்கிய ஆசிரியரும் கழகப் பொருளாளருமான திரு. நா. சோதிநாதன் அவர்களுக்கும் எனது இனிய நன்றிகள்.

இந்நூலை அழகுற அச்சிட்டு வழங்கிய சுன்னாகம் திருமகள் அழுத்தகத்தினருக்கும் நான் நன்றியுடையேன்.

இந்நூல் வெளிவரக் காரணமாக இருந்து என்னை உற்சாகமூட்டி ஆக்கமும் ஊக்கமும் தந்து பொருளுதவி நல்கியதுடன் அழகியதொரு அணிந்துரையையும் வழங்கி, நூலின் உள்ளடக்கத்தை வாசகனுக்கு ஆற்றுப்படுத்தி வைத்த சொல்லிசைச் செல்வர் திரு. த. சுப்பிரமணியம் அவர்களுக்கு எனது இதயம் நிறைந்த நன்றிகள் உரியது. கிளிநொச்சிப் பகுதி நீர்ப்பாசனப் பொறியியலாளராகக் கடமையாற்றும் இவர் பல சமய, சமூக மன்றங்களின் காப்பாளர் தலைவர் போன்ற பொறுப்பான பதவிகளிலிருந்து நற்பணிகளை ஆற்றிவருபவர். அருமையான சொற்பொழிவாளர். இவரது சேவைகள் இன்னும் சிறந்தோங்கி வளர இறைவனைப் பிரார்த்தித்து இந்நூலை உங்கள்முன் சமர்ப்பிக்கிறேன்.

நன்றி.

பிரதிப் பணிப்பாளர் பணிமனை,
நீர்ப்பாசனத் திணைக்களம்,
04-02-1986

ப. சிவானந்தசர்மா
(கோப்பாய் — சிவம்)
செயலாளர், திருநெறிக் கழகம்

# உயர்வான உதயகாலம்

நம்மிற் பலர் உஷத்காலத்தின் உந்நதமான சௌந்தர்யத்தைக் கண்டு அநுபவிக்கத் தவறிவிடுகிறோம். சிற்றஞ் சிறுகாலை பலபலவென்று விடிந்து கொண்டிருக்கிற வேளையில் துயில் நீக்கி எழுபவர்களது உள்ளத்திலே ஒரு புத்துணர்ச்சி பிறக்கிறது.

உலக இருள் அகன்று ஒளி பரவும் அந்த வேளையில் நமது உள்ளத்தின் துயர இருளும் மெல்ல அகன்று உள்ளொளி பரவுவதை அநுபவ பூர்வமாக உணரலாம். வெளி உலகத்தின் விபரீதமான பேரொலிகளும் இரைச்சல்களும் இல்லாமல் பட்சிகள் பண்ணிசைக்கும் இயற்கை ஒலிகள் மட்டும் நிறைந்திருக்கும் அந்த வைகறைப் பொழுது இறை தியானத்துக்கு இசைவான ஒன்று.

காலையும் இரவும் சந்தித்துப் பிரிகின்ற அந்த ரம்மியமான நேரத்தில் செய்யும் இறை வணக்கத்தை சந்தியாவந்தனம் என்பர். சந்தியா காலத்துக்குரிய இந்தப் பிரார்த்தனை எமது காலைக்கடன்களுடன் ஒன்றிணைந்த முக்கியமான ஒரு நித்திய கருமம் என்பதை நாம் மறந்துவிடக் கூடாது.

விக்கினங்கள் நீங்கி யாவும் நலம்பெற நிறைவேற வேண்டும் என்று வேண்டும் விநாயக துதியும், நித்திய கருமத்தை இனிது நிறைவேற்றுவேன் என்கிற சங்கல்பமும், இறைவன் திருநாமங்களைச் சொல்லி நமது உடலின் உறுப்புக்களைக் காப்பிட்டுக் கொள்வதும், பிராணாயாமம் ஆகிய மனக்கட்டுப்பாட்டுப் பயிற்சியும் இந்தச் சந்தியாவதனத்தில் இடம் பெறுகின்றன.

நடந்து முடிந்துவிட்ட நாளில் விட்ட தவறுகளையும், செய்யத் தவறிய நற்கருமங்களையும் நினைத்துப் பார்ப்பதற்கு உகந்த தருணம் உஷத்காலம் எனப்படும் இந்த உதய காலம்தான். தெரிந்தோ தெரியாமலோ நடந்துவிட்ட தவறுகளுக்காக வருந்திப் பிரார்த்திக்கும்போது இனிமேலும் அப்படிப்பட்ட தவறுகள் நேராமல் காக்கும் துணிவைப் பெறுகிறோம்.

உள்ளத்தின் அழுக்கை அகற்றி உறுதியையும் தூய்மையையும் பெறுவதற்கான இலகுவான யோகப் பயிற்சியே பிராணாயாமம். சலனமடையும் மனத்தின் சஞ்சலத்தைப் போக்கி அமைதியை ஏற்படுத்த இது உதவுகிறது.

புலரும்பொழுதில் தூங்குவது நமது உடலுக்குக் கேடு விளைவிப்பதொன்று எனச் சுகாதார ரீதியாக நிரூபிக்கப்பட்டுள்ளது. முன்இரவிலே போதிய அளவு தூங்குவதும் பின்இரவிலே இயன்றவரையில் தூக்கத்தைத் நீக்குவதும் ஆரோக்கியமான வாழ்க்கைக்கு அடிப்படையான ஒரு நற்பழக்கம். இந்தப் பழக்கத்தை நமக்கு வழக்கமாக்குவதற்காகத்தான் நமது ஆலயங்களிலே திருவனந்தல் என்று சொல்லி உஷத் கால பூஜையை ஏற்படுத்தியிருக்கிறார்கள்,

அதிகாலையில் துயில் நீத்ததும், விக்கினமில்லாத வெற்றியை நல்கும் விக்கினேஸ்வர வழிபாடும், அங்கங்களுக்கான காவலிடுதலும், தூய்மையும் தைரியமும் நல்கும் சூரிய நமஸ்காரமும், உடல், உளம் என்பவற்றைக் கட்டுப்படுத்தும் பிராணாயாமம் என்ற யோகப் பயிற்சியும் இணைந்த வைகறைப்போதின் வழிபாடு முடிந்தவுடன் ஒரு சுறுசுறுப்பையும், புத்துணர்ச்சியையும் நாம் அநுபவிக்க முடியும். இது அன்றைய தினத்தை இனிமையானதாக்க உதவுகிறது. நமது தினசரி வாழ்க்கை சந்தியாவந்தனத்துடன் தொடங்கட்டும்.

# நாம பஜனை

சங்கீத சாஸ்திரத்திலே ஒவ்வொரு ஸ்வரங்களுக்கும் சில அளவீடுகள் (அதிர்வெண்) சொல்லப்படுகின்றன. அவற்றுக்கென்று குறித்துள்ள அதிர்வெண்களிலிருந்து வேறுபடும்போது இசைப்பிரமாணம் தவறிவிடுகிறது.

விஞ்ஞான ரீதியாக ஒவ்வொரு அக்ஷரங்கள், ஒலிகளுக்கும் கூட குறிப்பிட்ட அதிர்வெண்களை நியமித்திருக்கிறார்கள். அந்தந்த ஒலிகள் அந்தந்தத் தன்மையோடு ஒலிக்கும்போது அதற்குரிய சக்தி வெளிப்படுகிறது.

ஆகாயத்திலே விமானம் போய்க்கொண்டிருக்கின்றபோது சில வேளைகளில் நமது வீட்டிலே இருக்கின்ற பாத்திரங்கள் அதிர்வதைக் காண்கிறோம்.

அணிவகுத்துச் சென்ற படை ஒன்றின் ஓசை அதிர்வினால் பாலம் ஒன்று இடிந்து விழுந்த சம்பவம் முன்பு ஒரு நாட்டில் நடந்திருக்கிறது.

இவையெல்லாம் அக்ஷரங்களுக்கும் ஓசை ஒலிகளுக்கும் உள்ள சக்தியைப் பிரத்தியக்ஷமாக நமக்கு நிரூபிக்கின்றன. ''ஓசை ஒலியெலாம் ஆனாய் நீயே'' என்றும், ''ஏழிசையாய் இசைப்பயனாய் இருப்பவன்'' என்றும் நாயன்மாரால் போற்றப்பட்ட இறைவன்கூட இத்தகைய சக்திகளுக்குக் கட்டுப்பட்டவன்தான்.

அகண்ட நாம பஜனைகள், கூட்டுப் பிரார்த்தனைகள், நாமார்ச்சனைகள், நாமஜெபங்கள் என்பன இவற்றைத்தான் எடுத்துக் கூறுகின்றன. அன்பர்கள் பலர் கூடியிருந்து உளத்தூய்மையுடன் ஆண்டவனைத் துதித்துப் பாடும்போது அங்கு அபரிமிதமான சக்தி உண்டாகின்றது. ஆண்டவனின் நாமங்களைச் சரியானபடி அக்ஷரசுத்தமாக அர்ச்சிக்கும்போதும், திரும்பத் திரும்ப ஒரே நாமத்தை அல்லது மந்திரத்தை ஜபிக்கும்போதும் இதுவே நிகழ்கிறது. இத்தகைய செயல்கள் அற்புதங்கள் பலவற்றை நமக்கு முன்னே நிகழ்த்த வல்லன.

ராமநாமத்தை ஜபம்செய்பவர்களும் 'ஸ்ரீராமஜெயம்' எழுதுபவர்களும் அபரிமிதமான சக்தியையும் அற்புதமான மனச் சாந்தியையும் பெறுகிறார்கள்.

ராமநாமத்தின் மகிமை ஸ்ரீராமபிரான் மகிமையைக்காட்டிலும் அதிகமானது. ஸ்ரீ ராமசந்திரமூர்த்தி சமுத்திரத்தைக் தாண்டி இலங்கைக்கு வரப் பாலம் அமைத்தார். ராமதூதனை அனுமான் இலங்கை

வருவதற்கு ராமநாமமே பாலமாக அமைந்தது. ''ராமராமராமராம'' என்ற மந்திர உச்சாடனத்துடன் இந்தப் பெரும் சமுத்திரத்தைத் தாண்டிவிட்டான் அனுமான்.

இன்னும் பல அற்புதங்கள் நிகழ்த்தி அவதாரபுருஷர்களாக மதிக்கப்பெறுவோரெல்லாம் ராம ஜெபத்தினலேயே மேல்நிலையை அடைந்துள்ளார்கள். ராமநாமம் மாத்திரமல்ல, ஓம் நமோ நாராயணுய என்கிற அஷ்டாக்ஷரமோ, சரவணபவ என்கிற ஷடாக்ஷரமோ அல்லது இவற்றுக்கெல்லாம் மேலான பஞ்சதசாக்ஷரீ என்னும் சக்தி மந்திரம், நமசிவாய என்கிற சிவபஞ்சாக்ஷர மந்திரம் இவை எதுவாளுலும், நாம ஜெபமாகவோ நாம பஜனையாகவோ பயன்படுத்தி மேல்நிலை அடைய வழிசெய்யும் பெரும் செல்வங்களாகும்.

சுகாசாரியர் பரீக்ஷித்து மன்னருக்குச் சொன்ன சத்திய வாக்கியம் ஒன்று ஸ்ரீபாகவதத்தில் வருகிறது.

'' சிவ இதி வாசம் விஸ்ருஜேத், தேன சஹ சம்வஸேத் ''

''சிவசிவ'' என்னும் மந்திரத்தை எந்தவேளையிலும் சொல்கிறவனோடு வாசம்செய்க என்பது இதன் பொருள்.

இந்த 'சிவ' என்ற சொல்லைச் சற்று நீட்டிச் சொன்னுற்போதும், அது சர்வ மங்களமான பரமேஸ்வரனின் சக்திரூபத்தின் நாமமாக ஆகிறது. அதுவும் உச்சாடனத்துக்குரியதே!

''யா தே ருத்ர சிவா தநூரகோரா பாப காசிநீ!
தயா நஸ்தநுவா சந்தமயா கிரிசந்தாபி சாகலீஹி!!''

என்றும்,

''யாதே ருத்ர: சிவா தநூ சிவா விஸ்வா ஹபேஷஜீ!
சிவா ருத்ரஸ்ய பேஷஜீ தயாநோ ம்ருட ஜீவஸே!!''

என்றும் சொல்லப்படுகின்ற வேதவாக்கியங்கள் (ஸ்ரீருத்ரம்) கவனிக்கத்தக்கன. பரமேஸ்வரனுக்கு இரண்டு வடிவங்கள் சொல்லப்படுகின்றன. இவ்விருவடிவங்களும் நமக்கெல்லாம் பிதாவாகவும் மாதாவாகவும் இருக்கின்றன. அதனுல்தான் உமாமகேஸ்வரன் என்று இறைவனைச் சொல்கிறோம். அவனுடைய நாமத்தை பக்தியோடும், நம்பிக்கையோடும் உச்சரித்துக்கொண்டே இருப்பவர்களுக்குத் துன்பம் என்பதே கிடையாது.

# நிஷ்காமிய கர்மங்கள்

'' கடமையைச் செய், அதற்கான பலனை எதிர்பார்த்திராதே'' என்று பகவான் ஸ்ரீ கிருஷ்ணர் பகவத்கீதையிலே அருளியிருக்கிறார். செய்கின்ற ஒவ்வொரு செயலுக்கும் பிரதிபலன்களை நாம் எதிர்பார்க்கிறோம். ஆனுல் பலன் எதையும் கருதாமல் நற்கருமங்களை மன நிறைவோடு செய்வதே மேலானது. இதைக் கர்மயோகம் என்பர்.

இவையெல்லாம் நமக்கு இயலாத பெரிய விஷயங்கள் என்று நாம் நினைத்துக்கொண்டிருக்கிறோம், ஆனுல், கர்மயோகமானது நாமெல்லாம் அநுஷ்டிக்கக் கூடிய ஒன்றுதான். நமக்குரிய கடமைகளை நாம் ஒழுங்காகத் தினமும் நிறைவேற்றுவதே ஒருவகையில் கர்மயோகம்தான்.

நித்திய கருமங்களும், தினசரிப் பிரார்த்தனைகளும், ஆலய வழிபாடுகளும் எமது நாளாந்தக் கடமைகள். நமக்கொரு துன்பம் நேர்ந்த வேளையில் அல்லது மகிழ்ச்சியான சம்பவங்கள் நடைபெறுகிற வேளையில் மாத்திரம் நாம் இறைவனை வழிபாடு செய்வோமானுல் அது காமியத்தின் பாற்பட்டது. (காரணத்தோடு கூடிய, எமது தேவைகளை முன்னிட்டு நடத்தப்பெறும் கர்மாக்கள்.)

அப்படியில்லாமல் தினசரியோ அல்லது இயன்றபொழுதிலெல்லாமோ ஆலயம்சென்று வழிபாடியற்றி வருவோமானுல், அது நமது மனச்சாந்தியை வளர்த்து மகிழ்ச்சியைக் கொடுக்கும். நமக்கு எதைச் செய்யவேண்டும்; எப்படிச் செய்யவேண்டும்; எப்போது செய்ய வேண்டும் என்பதெல்லாம் ஆண்டவனுக்குத் தெரியும். அதனுல், ஆண்டவனிடம் நாம் ''எனக்கு அதைக்கொடு, இதைக்கொடு'' என்று வேண்டிக்கொள்வது அநாவசியமல்லவா ?

''நமக்கு நல்லதைச் செய்; நமக்குமட்டுமல்லாமல் முழு உலகத்துக்குமே நல்லதைச் செய். தப்பித்தவறி நமக்குத் துன்ப துயரங்கள் ஏற்படுமானுல் அவற்றைத் தாங்கிக்கொள்ளும் சக்தியையும் நமக்குக் கொடு'' என்று ஆண்டவனிடம் வேண்டிக் கொள்வது நமது பரந்த மனப்பான்மையைக் காட்டுகிறது.

நாம் ஆலயங்களிலே பூஜைவழிபாடுகள் செய்யும்போது அர்ச்சனை செய்வது வழக்கம். ''யார்பெயரில் அர்ச்சனை'' என்று அர்ச்சகர் கேட்கிறார். நாம் நமது பெயரையோ, நமக்கு வேண்டியவர்கள் பெயர்களையோ சொல்கிறோம். இது ஒருவகைப் பிரார்த்தனைதான்.

நமக்கு ஏற்படுகின்ற நன்மை தீமைகளை இல்லாமல் செய்யும்படி வேண்டுதல் செய்ய முடியாது. அதாவது விதிப்படி நமக்கு நடக்க வேண்டியவை நடந்துதான் தீரும். ஆனால், அவற்றின் தாக்கங்களைச் சிறிது குறைக்கும்படி இறைவனை நாம் வேண்டிக்கொள்ளலாம்.

அதேபோல, நமக்கு விளைகின்ற தீமைகளினாலும், துன்பங்களினாலும் நம் மனம் பேதலித்துவிடாமல், மனம்தளர்ந்து தடுமாறாமல், வருப வற்றை எதிர்கொண்டு தாங்கிக் கொள்ளக்கூடிய மனத் தைரியத்தைக் கொடுக்கும்படி பிரார்த்தனை செய்வது பொருத்தமானது.

பல சந்தர்ப்பங்களில், ''சுவாமி பேரில் அர்ச்சனை செய்யுங்கள்'' என்றோ ''அம்பாள் பெயரிலே அர்ச்சனை செய்யுங்கள்'' என்றோ பலர் வேண்டிக் கொள்வதை நாம் காண்கிறோம். இதுவும் நிஷ்காமிய கர்மங்களின்பாற்பட்டதே!

நாம் ஆலயத்துக்குச் சென்று வழிபாடியற்றுவது அவசியம். பூஜை களில் கலந்துகொள்வதும் அர்ச்சனைகள் செய்விப்பதும் நல்ல இந்துக் களின் கடமை. இப்படி நமக்கென விதிக்கப்பட்ட கடமையைப் பயன் கருதாது செய்யும் வகையில்தான் ஆலயங்களிலே சுவாமி பேரிலே அர்ச்சனைகள் செய்கிறோம். சுவாமி பேரில் செய்தால் அது லோக க்ஷேமத்தைக் கருதும். முழு உலகத்துக்கும் நன்மை கிடைக்கும்போது நமக்கும் நன்மை கிடைக்கும் அல்லவா?

நமது கடமைகளை நாளாந்தம் நாம் நிறைவேற்றுவோமாக!

# கல்வியும் செல்வமும்

இந்த உலக வாழ்க்கையில் நமது தேவைகள் அநேகம். நமது ஆசைகளுக்கோ அளவில்லை. குறைந்தபட்சம் நமது நல்வாழ்விற்கு வேண்டியவை எவை என்று சிந்திக்கின்றபோது, கல்வி, செல்வம், தைரியம், அழகு என்று இப்படி அடுக்கிக்கொண்டே போகலாம்.

எது எப்படி இருப்பினும் கல்வி, செல்வம், தைரியம் ஆகிய மூன் றுக்கும் அதிதேவதைகளான சரஸ்வதி, லக்ஷ்மி, துர்க்காபரமேஸ்வரி ஆகியோரை வேண்டி வழிபடுவது உலகியல் வழக்கம்.

லோகமாதாவாகிய அம்பிகையை உபாசிப்பவன் இம்மூன்றையும் பெறுகிறான். ''ஸசாமர ரமாவாணீ ஸவ்ய தக்ஷிண ஸேவிதா'' என்று ஸ்ரீ லலிதா திரிபுரசுந்தரியின் சஹஸ்ர நாமத்தில் ஒருநாமம் வருகிறது. சரஸ்வதியும், லக்ஷ்மியும் அம்பிகையின் இருபக்கமும் அமர்ந்திருந்து சாமரம் இரட்டுகின்றனர் என்பது இதன் பொருள். அப்படியாயின் கல்வி, செல்வம், தைரியம் என்பவற்றை அவள் வழங்குவதில் என்ன சிரமம்?

ஆனால், நமக்கு முதலில் வேண்டியது என்ன என்பதை அம்பிகையே தீர்மானித்துவிடுகிறாள். இது ஆசார்யசுவாமிகளின் வாக்கு. அதற்கு அவர் எடுத்துக்கூறும் பாடல் இது:

ஸரஸ்வத்யா லக்ஷ்ம்யா விதிஹரி ஸபத்நோ விஹரதே
ரதே: பாதிவ்ரத்யம் ஶிதிலயதி ரம்யேண வபுஷா ।
சிரம் ஜீவந்நேவ க்ஷபித பசு பாச வ்யதிகர:
பராநந்தாபிக்யம் ரஸயதி ரஸம் த்வத் பஜநவாந் ॥

''அம்பிகையைப் பூஜிப்பவர்கள் பிரம்மவிஷ்ணுக்கள் பொறாமைப் படும்வகையில் கல்வியையும் செல்வத்தையும் அடைகிறார்கள். அது மட்டுமா? அழகில் மன்மதனையும் வென்றுவிடுவதால் ரதியைக்கூடக் கலங்கவைக்கிறார்கள். ஈற்றில் பாசவினை யகன்று பரமானந்த நிலையை எய்துகிறார்கள்'' என்பது இந்த ஸ்லோகத்தின் பொருள்.

அதாவது ''போக மோக்ஷப்ரதாயினி'' என்று இன்னொரு லலிதா ஸஹஸ்ரநாமம் துதிப்பதற்கிணங்க லௌகிக இன்பங்களையும் முக்தி இன்பத்தையும் ஒரு சேரத் தருவது அம்பாளின் கருணை.

எமக்கு முதலில் தரவேண்டியது கல்வியே என்று தேவி தீர்மா னித்துவிடுகிறாள். கல்வியறிவில்லாமல் பெறுகின்ற செல்வத்தினாலும் தைரியத்தினாலும் எவ்வித பயனுமில்லை. அவற்றை எவ்விதம் பயன்

படுத்துவது என்ற ஞானத்தை வழங்குபவள் சரஸ்வதி அல்லவா? அதனால்தான் ஆதிசங்கரர் தமது ஸ்துதியில் 'ஸரஸ்வத்யா' என்று ஆரம்பிக்கிறார் என்று ஆசார்ய சுவாமிகள் விளக்கம் தருகிறார் ஓரிடத்தில்.

லௌகிகத்தில் எல்லோருமே லக்ஷ்மீகடாக்ஷத்தையே விரும்பிக் கேட்கிறார்கள். ஆனால் வேண்டுவார் வேண்டுவனவற்றைக் கொடுப்பதோடு நில்லாமல் சமயமறிந்து யாருக்கு, எப்போது, எதைக் கொடுக்க வேண்டும் என்பதையும் தீர்மானம்பண்ணிவிடுகிறாள் நமது தாய். எவற்றை எல்வாறு பயன்படுத்தவேண்டும் என்ற ஞானத்தை — ஸரஸ்வதி கடாக்ஷத்தை — முதலில் கொடுப்பது அம்பிகையின் திருவுளம். அதனையே அந்த சௌந்தர்யலஹரி ஸ்லோகத்தில் ஆதிசங்கரர் தெரிவிக்கிறார்.

தைத்திரிய உபநிஷத்திலும்கூட இதேகருத்தைக் காணலாம்.

''ஸ மேந்த்ரோ மேதயா ஸ்ப்ருணோது ததோ மே
ச்ரியம் ஆவஹ II''

அறிவையும் செல்வத்தையும் தா என்று கேட்கும் இந்த வாக்கியத்தில் முதலில் மேதையை அதாவது அறிவைக் கொடு என்றும் அதன்பின்னரே ஸ்ரீயை அதாவது செல்வத்தைக் கொடு என்றும் வேண்டுகிறது உபநிஷதம்.

தன் குழந்தைகளுக்கு எது நல்லது என்று தாய்க்குத் தெரியும். நமக்கு வேண்டியது எது என்பதை உணர்ந்து நமக்கு வழங்குவது லோக மாதாவாகிய அம்பிகையின் பொறுப்பு என அவளிடம் விட்டுவிட்டு நாம் அவளை உள்ளன்போடு வழிபட்டு வருவோமாக.

*காஞ்சி முனிவர் சங்கராசாரிய சுவாமிகளின் கட்டுரையொன்றில் காணப்பட்ட கருத்துக்கள் இச்சிந்தனையில் அப்படியே பயன் படுத்தப்பட்டுள்ளன.

# ஆக்கையாற் பயனென்?

புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப்
பல்விருக மாகிப் பறவையாய்ப் பாம்பாகிக்
கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்
வல்லசுர ராகி முனிவராய்த் தேவராய்
செல்லா நின்றஇத் தாவர சங்கமத்துள்
எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தேன்''

என்கிறார் மணிவாசகப் பெருந்தகையார். ஏழேழு பிறப்புக்கள் பிறந்து பிறந்து இறந்து கொண்டிருந்தாலும் இந்த ஆன்மா ஒன்றே. அதன் ஈடேற்றமே இறுதிநோக்கு.

ஈசன் அடி சேரும் இறுதி நோக்கோடு பெரும் பயணம் மேற்கொண்டிருக்கும் நமக்கு, இவ்வுடலங்கள் எல்லாம் சாதனங்களாகும். சாதனைகளை நாம் நடத்தவேண்டி சர்வேஸ்வரன் தந்த சடலங்கள். மாயையின் பொய்த்தோற்றங்களே இவ்வுடல்கள். இவ்வுடல்களையும் உலக வாழ்க்கையையும் இகழ்ந்துரைக்கும் பெரியார்களை நாம் அதிகம் காணலாம்.

ஆனால், இந்த மானுடப்பிறப்பையும் வாழ்க்கையையும் விதந்துரைப்போரும் இல்லாமலில்லை. இவ்விருவகையிலான கருத்துக்களையும் நாம் சீர்தூக்கிப் பார்க்க வேண்டியவர்களாகிறோம்.

''காயமே இது பொய்யடா—வெறும்
காற்றடைத்த பையடா'' என்பது சித்தர் பாடல்.

''வாழ்வாவது மாயம்—இது
மண்ணாவது திண்ணம்'' என்பதும் இத்தகையதே.

அதே சமயத்தில், ''காய சித்தி பெற்றுச் சாவை வெல்வதே வீடு'' என்ற கருத்தையும் நாம் புறந்தள்ளிவிட முடியாது.

சுவர் இருந்தாற்தான் சித்திரம் எழுதலாம். ஆன்மாக்கள் தமது ஆணவாதி மலங்களை நீக்கி அரனடி சேர்வதற்கு ஆதாரம் வேண்டும். அதற்குத் திருவருட்துணை எவ்வாறுள்ளதோ அதே அளவு மாயை வடிவான இவ்வுலக வாழ்க்கையும் எதிர்மறையாகத் துணை புரிகிறது. வினைப்பயன்களை நாம் அனுபவிக்க உதவுகின்றவை இந்த உடலும் உலக வாழ்க்கையும். ''கொன்றால் பாவம் தின்றால் தீரும்'' என்பது பழமொழி. ''தின்றால்'' என்பதற்கு அனுபவித்தல் என்று இங்கே பொருள். செய்த கர்ம வினைகள் யாவற்றையும் நாம் அனுபவித்தே ஆகவேண்டும். அதற்கு உதவும் சாதனங்கள்தான் உடலும்

உலகமும். அவற்றைச் சாதனைகளுக்குப் பயன்படுத்துவதில்தான் நமது திறமை இருக்கிறது.

"புழுவாய்ப் பிறக்கினும் புண்ணியா உன்னடி என்மனத்தே
வழுவா திருக்க வரம்தர வேண்டும்" என்கிறார் அப்பர் அடிகளார்.

"நற்றவா உனை நான் மறக்கினும்
சொல்லும்நா நமச்சி வாயவே" என்கிறார் ஒருவர்.

பிறவி எதுவானாலும் இறையடி மறவாத இனிய வாழ்வுதான் முக்கியம்.

"குனித்த புருவமும் கொவ்வைச்செவ் வாயில் குமிழ்ஞ்சிரிப்பும்
பனித்த சடையும் பவழம்போல் மேனியில் பால்வெண்ணீறும்
இனித்த முடைய எடுத்தபொற் பாதமும் காணப்பெற்றால்
மனித்தப் பிறவியும் வேண்டுவ தேஇந்த மாநிலத்தே."

என்கிறார் திருநாவுக்கரசு சுவாமிகள்.

"காயமே இது பொய்யடா" என்ற கருத்துடனும் "வாழ்வாவது மாயம்" என்ற கருத்துடனும் இந்தத் தேவார வாக்கியங்கள் முரண் பட்டனவே அல்ல!

"கரும்பு இனிக்கும்" என்ற வார்த்தைக்கும் "கரும்பு கசக்காது". என்ற வார்த்தைக்கும் உள்ள தொடர்புதான் இதற்குள்ள தொடர்பும். எதிர்மறையாகச் சொல்லப்பட்ட அதே கருத்துக்கள் அவை.

மாய உடலையும் மாயவாழ்க்கையையும் மகேசன் பணிக்கே பயன் கொள்ளவேண்டு மென்பதே ஈற்றில் கிடைக்கும் உண்மை. சித்திரம் எழுதுவதற்கேற்ற வகையில் சுவரைத் தயார் செய்வது போல வீடு பேறு அடைவதற்கேற்ற வகையில் இந்த வாழ்வை நாம் தயார் செய் தாக வேண்டும்.

"ஆக்கை யாற்பயனென் ? அரன் கோயில் வலம் வந்து
பூக்கையால் அட்டிப் போற்றி என்னாதை இவ்
ஆக்கை யாற்பயன் என் ?"

# பாடும் பணி

"என்னை நன்றாக இறைவன் படைத்தனன்
தன்னை நன்றாகத் தமிழ்செய்யு மாறே!"

என்பது திருமூலர் வாக்கு. எங்களை இந்தப் பூமியிலே இறைவன் படைத்திருக்கிறான். அதற்குக் காரணம் இல்லாமல் இல்லை. நாம் முன்பு செய்த நல்வினை தீவினைப் பயன்களை அனுபவித்துத் தீர்ப்பதற் காகத்தான் நாமெல்லாம் பிறந்திருக்கிறோம். நாம் இதைத் தெரிந்து கொண்டவர்கள் என்றால் இனியும் ஒரு பிறவித்துன்பம் ஏற்படா மல் பார்த்துக்கொள்ள வேண்டும். அதற்கு ஒரேவழி இறைவன் புகழைப் பாடிப் பரவுதலேயாகும்.

நாமெல்லாம் எவ்வளவு பெரிய அதிஷ்டசாலிகள்! முன்னே முடிந்து விட்ட கிருதயுகம், திரேதாயுகம், துவாபரயுகம் ஆகிய யுகங்களில் இறைவனை அடைவதற்கு எத்தனையோ ஜபதபங்களும், பூசை புனஸ் காரங்களும், வேள்விகளும் செய்தாக வேண்டியிருந்தது. ஆனால் இறை வன் நம்மீதுகொண்ட பெருங் கருணை காரணமாக நமக்கெல்லாம் மிக இலகுவான வழியைக் காட்டியிருக்கிறார். பக்தியோடு பஜனை செய்வது ஒன்றே கலியுகத்தில் பரகதி அடைவதற்குப் போதுமானதாகும்.

பக்தியோடும், இசையோடும் கூடிய பாடல்கள் வெகு சுலபமாக ஆண்டவனை நமக்கருகே அழைத்துவந்துவிடும். "ஏழிசையாய் இசைப் பயனாய் இன்னமுதாய் என்னுடைய தோழனுமாய்" இருப்பவன் இறைவன் என்று பாடுகிறார் சுந்தரமூர்த்தி நாயனார். ஏழு ஸ்வரங்க ளில் பிறந்த இசையாகவும், அதன் வடிவாகவும் இருப்பவன் இறைவன். அதுமட்டுமா? 'என்னுடைய தோழனுமாய்' என்கிறார் சுந்தரர். கூப் பிட்ட குரலுக்கு ஓடிவரும் அன்புத் தோழனுமாய் இருக்கிறான் இறைவன்.

"பண்ஒன்ற இசைபாடும் அடியார்கள் குடியாக
மண்ணின்றி விண்கொடுக்கும் மணிகண்டன்"

என்கிறார் திருஞானசம்பந்த சுவாமிகள். பண்ணிசைபாடும் அடியவர் களுக்கு அடியவராகிவிடும் ஆண்டவனது எளிமைதான் என்னே! அவ னைப் புகழ்ந்து பாடுவதில் நமக்கென்ன சிரமம்.

"காத லாகிக் கசிந்துகண் ணீர்மல்கி
ஓது வார்தமை நன்னெறிக் குய்ப்பது
வேதம் நான்கினும் மெய்ப்பொரு ளாவது
நாதன் நாமம் நமச்சி வாயவே."

உண்மை அன்புடன் கசிந்து கண்ணீர் பெருகி ஓதுகின்றவர்களை அவன் நன்னெறிப்படுத்துகிறான். இதுவும் சம்பந்தர் வாக்கு.

" தமிழோடிசைபாடல் மறந்தறியேன் " என்கிறார் திருநாவுக்கரசு சுவாமிகள். "பாடும் பணியே பணியாய் அருள்வாய் " என்கிறார் அருணகிரிநாதர்.

நம்மைப் பிறப்பித்த நாயகனை நல்ல தமிழால் போற்றித் துதித்துப் புகழ்ந்து கவி பாடுதல் நமது கடமையல்லவா? "முத்தமிழால் வைதாரையும் வாழவைப்போன்" என்பதும் அருணகிரிநாதரது அருமையான வாக்கு.

"பூமியில் புகழ்தக்க பொருளே" என்று இறைவனை விளிக்கிறார் அப்பர் சுவாமிகள். பொன்னையும், பொருளையும், பூவையரையும் புகழ்ந்து புகழ்ந்து பாடுவதல்ல நமது பணி. பூமியில் புகழத்தக்க ஒரே பொருள் அந்தப் பரம்பொருளே என்பது அவர் துணிபு.

இறைவன் எங்களைச் சும்மா படைக்கவில்லை. நன்றாகப் படைத்திருக்கிறான். ஓரறிவு படைத்த தாவரங்களாகவோ ஐந்தறிவு படைத்த விலங்குகளாகவோ படைக்காமல் ஆறறிவு படைத்த மனிதராகப் படைத்த அவனது கருணைதான் என்னே! அதுவும் கூன் குருடு செவிடு போன்ற குறைபாடு இல்லாமல் முழு மனிதராக நம்மைப் படைத்திருக்கிறான்.

" அரிது அரிது மானிடராதல் அரிது
கூன்குருடு செவிடு நீங்கிப் பிறத்தல் அரிது "

என்று ஔவைப்பிராட்டி சொல்லியிருக்கிறார். இப்படிக் குறையற்ற முழு மனிதராக நாம் பிறந்திருப்பதற்கு மகிழவேண்டாமா?

" குனித்த புருவமும் கொவ்வைச்செவ் வாயிற் குமிண்சிரிப்பும்
பனித்த சடையும் பவளம்போல் மேனியில் பால்வெண்ணீறும்
இனித்த முடைய எடுத்தபொற் பாதமும் காணப்பெற்றால்
மனித்தப் பிறவியும் வேண்டுவ தேஇந்த மாநிலத்தே"

என்பது திருநாவுக்கரசு நாயனார் வாக்கு.

எம்மை நன்றாகப் படைத்த இறைவனை நன்றாகத் தமிழ் செய்து வாழ்த்துவோமாக.

# ஸ்கந்தன்

"ஸ்கந்த" என்பதற்குப் பற்றுக்கோடு என்றொரு பொருள் உண்டு. வலியற்றவர்களுக்கெல்லாம், வலிமையான ஒரு பற்றுக்கோடு அவசியம். கடலில் தத்தளிப்பவன் தன்கையில் ஒரு பலகைத் துண்டு கிடைத்தால் அதனைப் பற்றிக்கொண்டு கரையேறிவிட முயற்சிக்கிறான். மூப்படைந்து தள்ளாடும் மனிதன் ஊன்றுகோல் ஒன்றைப் பற்றுக்கோடாகக் கொண்டு நடக்கிறான்.

நாமெல்லாம் சம்சார சாகரத்திலே சிக்கித் தத்தளிக்கிறோம். இந்த உலக வாழ்க்கை என்ற துன்பத்திலே சிக்கிநின்று தடுமாறுகிறோம். நமக்கெல்லாம் பற்றுக்கோடாக இருப்பவன் ஸ்கந்தன்.

" பற்றுக பற்றற்றான் பற்றினை ; அப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு " என்று திருவள்ளுவர் கூறுகிறார்.

இந்த உலகப் பற்றுக்கள் என்ற துன்பங்களிலிருந்து விடுபடவேண்டுமானால் இறைவனுடைய பாதங்களை நமது பற்றுக்கோடாக எண்ணி இறுகப் பற்றிக்கொள்ளவேண்டும். பற்றில்லாமல் இருப்பது நமக்கெல்லாம் மிகவும் கஷ்டமான காரியம். அதற்காகத்தான் இந்த ஏற்பாடு.

நம்குழந்தை ஏதோ ஒரு நல்லபொருளை எடுத்து விடுகிறது. கேட்டால் தரமாட்டேன் என்கிறது. அதை வைத்து விளையாட ஆசைப்படுகிறது குழந்தை. அப்பொருளை அக் குழந்தை உடைத்துவிடும் என நாம் பயப்படுகிறோம். எனவே, என்ன செய்கிறோம்? குழந்தைக்குப் பிடித்த வேறொரு பொருளைக் கொடுத்து அந்தப் புதிய பொருளில் பற்று உண்டாகும்படி செய்துவிட்டு மற்றப்பொருளை மெதுவாக வாங்கி விடுகிறோம். குழந்தை புதிய பொருளில் லயித்துவிடுகிறது.

நமக்கெல்லாம் பற்றுக்கோடான ஸ்கந்தனின் பாதங்களை நாம் இறுகப் பற்றிக்கொண்டுவிட்டோமானால் ஏனைய பற்றுக்கள் இயல்பாகவே நம்மைவிட்டு விலகி விடுகின்றன. ஸ்கந்தப்பெருமானை இறுகப் பற்றிநின்று இனிய பாடல்கள்பல பாடியவர் அருணகிரிநாதர். அவரது நூல்களுள் ஒன்று கந்தர் அலங்காரம்.

அலங்காரம் என்றால் யாருக்குத்தான் பிடிக்காது. நம்மை நாமே அலங்கரிக்கின்றோம். நம் குழந்தைகளை விதவிதமாக அலங்கரிக்கின்றோம். வீடுவாசலை அலங்கரிக்கின்றோம். இப்படி, கண்ணுக்கு லக்ஷணமாக எதையும் அலங்கரிப்பதில் நமக்கெல்லாம் ஒரு மனத்திருப்தி. கருத்தைக் கவர்வதற்கு அலங்காரம் உதவுகிறது.

உருவமற்ற கடவுளுக்கு உருவம் ஏற்படுத்தி அத்திருவுருவத்துக்கு ஒப்பனை செய்து மகிழும்போது அதில் நமது கண்கள் பதிகின்றன. கண்வழியே கருத்தும் பதிகின்றது. ஆண்டவனின் அழகிய திருவுருவத்தில் நமது கருத்துப் பதியும்போது அந்தத் திருவுருவம் மறைந்து ஆண்டவனையே நாம் காணமுடிகிறது.

இத்தகைய ஒரு பக்குவமான உயர்நிலைக்கு நம்மைக் கொண்டுவர அலங்காரம் உதவுகிறது. நம் அருணகிரிப் பெருமானும் முருகனுக்கு அலங்காரம் பண்ண விரும்பினார். ஆனால், அவர் சற்று வேறுபட்ட முறையில் அதைச் செய்திருக்கிறார். பூசலார் நாயனார் மனத்தாலே கோயில் கட்டி வழிபட்டதுபோல அருணகிரியார் வாக்கினாலே அலங்காரம் செய்திருக்கிறார்.

மனம், வாக்கு, காயம் மூன்றினாலும் நாம் ஆண்டவனுக்குப் பணிசெய்யலாம். வாக்கிற்கு அருணகிரி எனப் பெயர் பெற்றவர் அல்லவா இந்த முனிவர். எனவே, வாக்கினாலே—வார்த்தையாலே—சொல்மலர்களினாலே—மாலைதொடுத்து அலங்கரிக்கிறார். சொல் அலங்காரப் பாமாலைகள் அவைகள். கந்தர் அலங்காரம் என்று அதற்குப் பெயரிட்டிருக்கிறார்.

கருணைக்கு அருணகிரி என்று சொல்லப்படுவதுண்டு. அருணகிரியார் நம்மீதெல்லாம் கொண்ட கருணையினால் நம்முடைய தவறுகள், குற்றங்கள், பாபங்கள் யாவற்றையும் தம்மீது சுமந்துகொள்கிறார். தாமே அத்தகைய பாபங்களையெல்லாம் செய்துவிட்டதாகக் கூறி அழுதழுது பாடுகிறார்.

பேற்றைத் தவம்சற்றும் இல்லாத தனக்கு, பிரபஞ்சம் என்ற சேற்றைக் கழித்துவிட முருகன் அருள்புரிந்த பெருமையைப் போற்றிப் பாடுகிறார். தாம் பாடுவது மட்டுமல்லாமல் நம்மையும் பாடும்படி கூறுகிறார்.

"பாடும் பணியே பணியாய் அருள்வாய்" என்றார் கந்தரனுபூதியில். "படிக்கும் திருப்புகழ் போற்றுவன்" என்கிறார் கந்தர் அலங்காரத்தில். நாமும் அவரது பாடல்களைப் பாடிப்பாடி முருகப் பெருமானின் கருணையைப் பெறுவோமாக.

# வருமுன் காப்போம்

நமது எதிர்கால நன்மைகருதி நாம் வங்கிகளில் சேமிப்புகளை ஏற்படுத்திக் கொள்கிறோம். நமது வாழ்க்கை எப்போது முடிவுறும் என்பது நமக்குத் தெரியாது. அதனால் நம்மைக் காப்புறுதி செய்து கொள்ளவும் தவறுவதில்லை.

லௌகிகரீதியில் இப்படியெல்லாம் செய்கின்ற நாம், ஆன்மீக ரீதியில் நமக்காக என்ன பாதுகாப்புச் செய்துகொள்ளப் போகிறோம். திடீரென்று எங்கள்முன் ஒருநாள் வந்து நிற்பான் காலன். அப்போது எதுவும் செய்வதற்கு முடியாது.

எனவேதான் இப்போதே புண்ணியத்தைச் சேமித்துவைக்கத் தொடங்கவேண்டுமென வலியுத்துகின்றனர் பெரியோர். "அப்போதைக் கிப்போதே சொல்லிவைத்தேன்" என்று ஆண்டவனிடம் சொல்லி வைக்கிறார் ஆழ்வார்.

முருகன் அடியவரான அருணகிரிநாதரும் இதை மறக்கவில்லை. "முருகா, நான் தினந்தோறும் உனது திருப்புகழ் படிப்பேன். என்னைக் கொண்டுபோக யமன் வரும்போது, 'அஞ்சல்' என்று நீ காத்தருள வேண்டும்" என்கிறார்.

"படிக்கும் திருப்புகழ் போற்றுவன் கூற்றுவன் பாசத்தினால்
பிடிக்கும் பொழுதுவந் தஞ்சல் என்பாய்" என்பது அவர் பாடல்.

ஒரு சமயம் அருணகிரியார் ஆலயக்கோபுரத்தில் ஏறிநின்று கீழே குதித்தார், தான் செய்த தவறுகளை உணர்ந்து வாழ்க்கையை வெறுத்து தற்கொலை செய்வதற்காக. ஆனால், கூற்றுவன் வந்து பாசத்தினால் பிடிக்கவில்லை. அவர் விழுந்தது பட்டுமெத்தையில். அயில்வேலன் திருக்கரமாகிய பட்டுமெத்தையில் விழுந்தார். கூற்றுவன் வரமுன்பு வேலவன்வந்து ஆண்டுகொண்டார். இந்த அநுபவத்தினால்தான் மறுதரமும் அப்படியே காத்தருள வேண்டுமெனக் கேட்கிறார். எமக்கும் அறிவுரை கூறுகிறார்.

"அழித்துப் பிறக்கவொட்டா அயில்வேலன் கவியைஅன்பால்
எழுத்துப் பிழையறக் கற்கின்றிலீர்; எரிமூண்டதென்ன
விழித்துப் புகையெழப் பொங்குவெங் கூற்றன் விடும்கயிற்றால்
கழுத்தில் சுருக்கிட் டிழுக்கும் அன்றோ கவிகற்கின்றதே"

இது ஓர் அற்புதமான பாடல், எதையும் நாளை, நாளை என்று ஒத்திப்போடுகின்ற நமக்கெல்லாம் இது ஒரு நல்ல பாடம்.

"கொடும் தீயென விழித்துப் பொங்கியவண்ணம் கூற்றன் வரப் போகிறான், வந்து, கயிற்றால் கழுத்தில் சுருக்கிட்டு இழுக்கின்ற போதிலா நீங்கள் வேலவனின் பாடல்களைப் படிக்கப் போகின்றீர்கள் ? இப்போதே அயில்வேலன் கவியை அன்பாகப் படிமின்கள்" என்கிறார் அருணகிரியார்.

அன்போடு பாடவேண்டும் என்பது அவர் விருப்பு. "சொல்லிய பாட்டின் பொருளுணர்ந்து......" என்கிறார் மணிவாசகர், பாடுகின்ற பாட்டின் பொருளை அறிந்து அன்பால் கசிந்துருகிப் பாடவேண்டும்.

"வான்கலந்த மாணிக்க வாசகநின் வாசகத்தை
நான்கலந்து பாடுங்கால்" என்கிறார் திருவருட் பிரகாசவள்ளலார்.

பாடல் வேறு நாம் வேறு என்றில்லாமல் பாடலோடு,—பாட்டின் பொருளோடு—பாடலின் பண்ணோடு கலந்துநின்று பாடவேண்டும்.

இன்னொரு முக்கிய விஷயத்தைக் கூறுகின்றார் அருணகிரி. "எழுத்துப் பிழையறக் கற்கின்றிலீர்."

வார்த்தைகள், எழுத்துக்கள், அவற்றின் ஓசைகள் இவற்றுக் கெல்லாம் மாபெரும் சக்தி உண்டு. இது விஞ்ஞானபூர்வமாக நிருபண மான ஒன்று. அந்தந்த ஓசைகள், வார்த்தைகள் என்பன பிழை படாமல் பாடவேண்டியது அவசியம்.

எனவே, நாமும் இப்போதே அயில்வேலன் கவியை எழுத்துப் பிழையறக் கற்று அன்போடு பொருளுணர்ந்து பாடும் பணியே பணி யாகக் கொண்டு கூற்றுவன் வந்து பாசக்கயிற்றை வீசுமுன்னர் நமக் கொரு பாதுகாப்பைத் தேடிக்கொள்வோமாக.

# பிரபஞ்ச தத்துவம்

பிரபஞ்சமாகிய அண்டசராசரங்களையெல்லாம் விளையாட்டாகவே படைத்துத் துடைக்கின்ற அந்தப் பேரருளாளன் முழுமுதற் கடவு ளாகப் போற்றப்படுகிறான். யாவற்றையும் கடந்து வெளியே நிற் கின்ற அதேநேரத்தில் யாவற்றினுள்ளேயும் கலந்துறைகின்ற அப்பெருமான் கடவுள் என அழைக்கப்படுகிறார்.

பாச மலங்களிலே அழுந்திக்கிடக்கும் பசுக்களாகிய ஆன்மகோடி களைப் பக்குவப்படுத்தி மலபரிபாகம் செய்து ஆன்ம ஈடேற்றம் செய் வது அந்தப் பரமகருணாமூர்த்தியின் திருவருள். அதனால்தான் அவ னைப் 'பதி' என்று அழைக்கிறோம். பதியின் பாதங்களில் மனம் பதித்த பசுக்களாகிய ஆன்மாக்கள் பாசம் அகன்று பக்குவம் அடைகின்றன.

தாம்தாம் செய்த வினைப் பயன் யாவும் தாமே அனுபவிக்க வேண் டிய கடப்பாடுடையவர்கள் நாங்கள். வினைப்பயன் வகைதெரிந்து, வினையின் வகையறிந்து ஊட்டும் உரிமையுடையவன் பசுபதி. நம்மீது கொண்ட நற்கருணை காரணமாக, நல்வினைகளை நாடிச் செய்யும் நல் லறிவை அவன் எமக்குத் தந்தருள்கிறான்.

தீவினை செய்தால் தீநெறிசெல்ல நேருமென்ற திருந்திய அறிவை நமக்களித்து நம்மை நல்வழியில் நடத்தும் நாயகன் அவன். நமக்குத் தாயாய், தந்தையாய், உற்றமாய், சுற்றமாய், நட்பாய், நல்லறிவாய் நின்று வழிநடத்துபவன் அவன்.

பிறந்து பிறந்து பேரிடர்ச் சேற்றில் கிடந்து உழன்று உழன்று, இறந்து இறந்து மீண்டும் பிறக்கும் எமக்குப் பிறவாவரம் தந்து பேர ருள் தருபவன் அந்தச் சிவபரம்பொருள்தான். பிறப்பறுக்கும் பிஞ்ஞக னை அந்தப் பேரருளாளன் வேதங்கள் ஐயா என ஓங்கி ஆழ்ந்து அகன்ற நுண்ணியன்.

பாசமாம் பற்றறுத்துப் பாரிக்கும் ஆரியனை பரம்பொருள் பேராது நின்ற பெருங்கருணைப் பேராறாக ஊற்றெடுத்துப் பாய்வது. காரண காரியமின்றியே கருணை கொள்ளும் பெரும் செல்வர் அவர். 'அவ்யாஜ கருணாமூர்த்தி' என்று லலிதா சஹஸ்ரநாமம் துதிப்பது இந்தப் பரம பொருளின் சத்தியையன்றோ.

இனிமை பயக்கும் சர்க்கரையினுள்ளே மருந்தைப் பொதிந்து கொடுத்து நோய்தீர்க்கும் வைத்தியனைப்போல ஆன்மாக்களின் பிறவிப்

ணிதீர்க்கும் வைத்தியநாதனாகிய பரமசிவனும் சிற்றறிவினராகிய ஆன்மாக்கள் பூஜை உற்சவம் முதலிய கிரியைகள் மூலம் அந்தர்யாக பூசையின் மேன்மை உணர்ந்து பரமஞானம் பெற்றுய்ய வைக்கிறான்.

விறகிலே தீபோலவும், பாலிலே நெய்போலவும் மறைந்து நிற்கின்ற இறைவனை, அன்பையே கோலாய் நாட்டி அறிவையே கயிறாய்க் கொண்டு கடையும்போது வெளிப்படுத்தலாம். இவ்வுடம்பையே கோயிலாகவும் மனத்தை ஆன்மாவாகவும் பாவித்து உள்ளத்தன்பையே பாலாகவும் நெய்யாகவும் கொண்டு அபிஷேகம் செய்து வழிபடும் ஞான மார்க்கப் பூஜையாவது சிவதரிசனத்துக்குகந்த உயர்வழியாகும்.

பாசவினையின் வலியகற்றிப் பதியைச் சென்றடைகின்ற பசுவின் விளக்கமே மஹோற்சவமாகும். கொடித்துணியிலே எழுதப்பட்டிருக்கும் கொடிப்படமானது சீவான்மாவைக் குறிக்கும். கொடித்தம்பமானது பரமான்மாவாகிய பதியைக் குறிக்கும். கொடிமரத்திலே கொடி ஏறிச் செல்வதற்குத் துணைபுரியும் மஞ்சட் கயிறே திருவருட் சக்தியாகும். தர்ப்பைக் கயிறு பாசமாகிய ஆணவாதி மலங்களைக் குறிக்கும்.

மஹோற்சவத்திலே தொடர்ந்து நடைபெறும் கிரியைகள் யாவும் படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் ஆகிய ஐந்தொழில்களின் விளக்கமாக அமைகின்றன.

பஞ்சகிருத்தியங்களின்மூலம் ஆன்மகோடிகளைப் பக்குவப்படுத்தும் பரமான்மா மும்மலமாயை களைந்து முக்தி யளிக்கிறது. ஆலயங்களில் நாம் காணும் நித்திய பூசைகள் முதல் மஹோற்சவம் வரையிலான கிரியைகளும், யோக, ஞான வழியிலான மார்க்கங்களும் பரம்பொருளிடத்தில் நம்மை அழைத்துச் செல்லும் வழிகளே!

நாமும் எமது அறிவுக்கும் ஆற்றலுக்கும் ஏற்றவகையில் இறை பணி செய்து, அன்பும், அறமும் உடையோராய் நல்வாழ்க்கை வாழ்ந்து இன்புற்றிருப்போமாக.

# விளக்கம் அறியா வழக்கம்

சைவ சமயத்தின் பிரமாண நூல் எது? இக்கேள்விக்கு ஒரே சொல்லில் நாம் விடையளித்துவிட முடியாது. வேதம் நமது சமயத்தின் பொதுப்பிரமாணநூல். சிவாகமங்கள் நமது சிறப்புப் பிரமாண நூல்கள். இவையிரண்டினுள் மட்டும் நமது மதம் அடங்கி விடவில்லை. இந்த அடிப்படை நூல்களின் கருத்துக் கருவூலங்களை விளக்கும் இனிய நூல்கள் இன்னும் உண்டு.

பகவத்கீதை, இதிஹாசங்கள் இவைகூட நமது பிரமாண நூல்களே. இவையெல்லாம் மிகவும் உயர்ந்த தரத்திலுள்ள நூல்கள். சாதாரண பாமரமக்களிடம் இவை நெருங்கிச் செல்லவில்லை. அம் மக்கள் இவற்றை நோக்கிச் செல்லவும் இல்லை.

இக்குறைபாட்டை நீக்குவதற்கும் சமயப்பெரியார்கள் தோன்றினார்கள். இந்த ஞான நூல்களுக்கும் பாமரஜனங்களுக்கும் இடையிலே தத்துவப் பாலங்களை உருவாக்கினார்கள். வேதாகமங்களிலே உள்ள மேலான உட்பொருள்களைப் பிழிந்தெடுத்து சாதாரண சமூகமட்டத்திலான கதை மரபு என்ற மூலாம் பூசி மக்களுக்கு வழங்கினார்கள். இவைகளே புராணங்கள்.

இவைமட்டுமல்லாமல் தமிழ் வேதங்களான திருமுறைகளும் திருவாய்மொழிகளும் பல்வேறுபட்ட பிரார்த்தனை நூல்களும் உருவாக்கப்பட்டன. பாமரமக்கள் இறைவனது திருவருட் பெருமைகளையும் மத அநுட்டானங்களையும் சிறிது உணரத் தலைப்பட்டனர்.

காலப்போக்கில் மக்களின் வாழ்க்கை முறைகள் மாறுபட்டன. பல்வேறு துறைகளில் அவர்களின் நாட்டம் கலந்து செல்கின்ற காரணத்தால் மத ஆராய்ச்சிகளில் நாட்டம் குறைந்தது. வேதாகமங்கள் பற்றிய சிந்தனைகள் மிகவும் அருகி, அவற்றின் வழிநூல்களை மட்டும் மேலோட்டமாகப் படித்தறிவதுடன் நின்றனர் மக்கள்.

இங்குதான் நமது மதத்தின் வளர்ச்சிக்குப் பாதகமான நடைமுறைகள் ஆரம்பமாகின. புராணக் கதைகள் முதலியவற்றை மேலோட்டமான முறையில் படித்த மக்கள் அவற்றின் தத்துவார்த்தங்களையோ உட்பொருட்களையோ உணரமுற்படவில்லை. புராணங்கள் சொல்லும் கதைகளே நமது சமய அடிப்படை உண்மைகள் என்று நம்பத் தலைப்பட்டார்கள்.

இன்னொருபுறத்தில், மரபுரீதியாகச் சமய அடிப்படையில் வழங்கி வந்த சில நடைமுறைகள், சட்டதிட்டங்கள், கொள்கைகளை அப்படியே கண்ணை மூடிக்கொண்டு பின்பற்றினரேயன்றி அவற்றுக்கான காரண காரியங்களையும் வரலாற்றுண்மைகளையும் புரிந்துகொள்ள முற்படவில்லை;

இங்கு ஒரு கதையைக் கூறுவது பொருத்தமாக இருக்கும். ஒருவன் தனது பாட்டனாரின் திவச நாளிலே தந்தையார் ஒரு பூனையைக் கட்டி வைப்பதைக் கண்டிருக்கிறார். தந்தையார் இறந்தபின் அவரது திவசம் நடக்கும்போது அவன் வீட்டில் நின்ற பூனையைத் தேடினான். காணவில்லை. ஊர்முழுவதும் தேடி ஒரு பூனையைக் கொண்டுவந்து கட்டி வைத்துவிட்டுத் திவசம் செய்கிறான்.

வீட்டிலே வளர்க்கப்படும் பூனை திவசத்துக்குரிய பொருட்களை அசுத்தம் செய்துவிடுமென்ற காரணத்தால் தந்தை பூனையைக் கட்டிவைத்தார். மகன் அதற்குரிய காரணத்தை ஆராய முற்படவில்லை. பூனை கட்டி வைப்பதும் திவசக் கிரியைகளில் ஒன்று என எண்ணிவிடுகிறான்.

இதேபோலத்தான், விளக்கம் அறியாத வழக்கங்கள் பலவற்றைக் கைக்கொள்கிறார்கள் மக்கள். இவற்றையும் நமது புராணக்கதைகளில் இடம்பெறும் பொருத்தமற்ற சில சம்பவங்களையும் கேலிசெய்யும்போது நம்மவர்கள் கூனிக்குறுகிவிடுகின்றனர்.

புராணக் கதைகள் வெறும் கதைகளேயன்றி அவையே நமது சமய உண்மைகள் அல்ல. மரபு ரீதியான நமது சமயச் சடங்குகளிலும், புராண இதிஹாசக் கதைகளிலும் அடங்கியுள்ள தத்துவ உட்பொருள்களை நாம் நன்கு புரிந்துகொள்ள முயற்சிக்கவேண்டும்.

இவற்றை நாமும் புரிந்துகொள்வதுடன் நம்மைக் கேலிசெய்யும் பிறமதத்தவர்களுக்கு எடுத்துச் சொல்லவும் துணிந்தால் நமது சமயம் நன்கு முன்னேறும்.

---

